# திருப்புகழமிர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

சாதாரண　　　　தை

உ
முருகா
## மகாகும்பாபிஷேகம்

பிரப்பன் வலசை (இராமநாதபுரம் தாலூக்கா)

ஸ்ரீ மயூரப்பெருமான்—பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் தெய்வத்தானம் மகாகும்பாபிஷேகம் சாதாரண ஷி தை மீ 18உ 31-1-71 ஞாயிற்றுக்கிழமை காலை 8-30 மணிக்கு மேல் 10 மணிக்குள்ளாக நிகழும். அன்பர்கள் விழாவில் கலந்து கொண்டு ஸ்ரீ குமார பரமேஸ்வரன் திருவருளும் பாம்பன் ஸ்ரீமத் குருதாச சுவாமிகள், குருவருளும் பெற்றுய்யலாம். (பிரப்பன் வலசை இராமநாதபுரத்திலிருந்து கிழக்கே மண்டபம் வழியில் 18 மைலில் உள்ளது.)

## ஸ்ரீ ராமகிருஷ்ண குடில் ஆண்டு விழா

27-12-70ந் தேதி திருச்சி, திருப்பராய்த்துறையிலுள்ள ஸ்ரீ ராம கிருஷ்ண குடிலில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஜெயந்தி விழாவும் ஸ்தாபனத்தின் பல்வேறு கிளைகளின் ஆண்டு விழாவும் நடைபெற்றன.

அதிகாலை ஆஸ்ரமக் கொடியேற்று விழாவும், அதைத் தொடர்ந்து பரமஹம்ஸர் திருவுருவப்பட சிவாலய ஊர்வலமும் நடந்தேறின. மதியம் மஹேஸ்வர பூஜை (அனைவர்க்கும் அன்னம் பாலிப்பு) ஆயிரக் கணக்கான பேர்களுக்கு காவிரிக் கரையோரம் நடைபெற்றது.

மாலை பொதுக்கூட்டத்தில், திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள், தமிழ்நாடு உயர்நீதிமன்ற நீதிபதி ஜஸ்டிஸ் திரு. எஸ். மஹராஜன் அவர்கள், திருச்சி மாவட்ட முன்னாள் கலெக்டர் திரு. ஆர். எஸ். மலையப்பன் ஐ. ஏ. எஸ். அவர்கள் கலந்து கொண்டு உரையாற்றினார்கள்.

இரவு "தியாகத்தின் சிகரம்" என்ற நாடகம் குருகுல மாணவர்களால் நடிக்கப் பெற்றது.

முடிவில் நடைபெறும் அனாதைச் சிறார்கள் சேவைக்கு வாரியார் சுவாமிகள் ஏற்படுத்தியுள்ள ஒரு குழந்தையின் வருடாந்திரச் செலவை ஏற்றுக்கொள்ளும் "திருவருள் திட்டத்தில்" இந்த ஆண்டு விழாக் கூட்டத்துடன் 65 அன்பர்கள் ரூ. 300 வழங்கும் வருடாந்திரச் சந்தாதாரர்களாகச் சேர்ந்துள்ளார்கள். வாரியார் சுவாமிகள் ரூ. 1,00,000 (ஒரு லட்சமும்) திரு. எப். பச்சமுத்து ரூ. 10,000 (பத்தாயிரமும்) திரு. கோதண்டபாணி ரூ. 10,000 (பத்தாயிரமும்) டாக்டர் சிற்றம்பலம் ரூ. 4000 (நாலாயிரமும்) ஏற்கனவே மூலதன நல நிதியாக வழங்கியுள்ளார்கள். குடிலில் 300-க்கு மேற்பட்ட தாய் தந்தை இருவருமேயில்லா ஏழை அனாதைச் சிறார்கள் புகலிடம் பெற்றுள்ளனர். வருடம் ரூபாய் மூன்று இலட்சம் சுமார் செலவாகிறது. அரசு மான்யம் முக்கால் இலட்சம். பாக்கியெல்லாம் அன்பர்கள், பொது ஸ்தாபனங்கள் நன்கொடையே. குடிலுக்கு கொடுக்கும் நன்கொடைகளுக்கு வருமான வரிவிலக்கு உண்டு.

## மகாபாரதச் சொற்பொழிவுகள்

சென்னை, ஆழ்வார்ப்பேட்டை, வீனஸ் காலனியில், ஆஸ்திக சமாஜத்தின் நிகழ்ச்சியாக ஆசிரியர் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களால் 18-1-71 திங்கட்கிழமை முதல் 5-2-71 வெள்ளிக்கிழமை முடிய நாள்தோறும் மாலை 7 மணி முதல் 9 மணி வரை மகாபாரதச் சொற்பொழிவுகள் நிகழும். அன்பர்கள் கேட்டுப் பயனடையலாம்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

முருகா.

## சந்தா நேயர்களுக்கு ஒரு முக்கிய அறிவிப்பு

முருகவேள் முழுமுதற் கருணையினால் நடந்துவரும் நமது திருப்புகழமிர்தம் வரும் விரோதிகிருது ஆண்டு (ஏப்ரல் 1971) முதல் மூன்று மாதங்களுக்கு ஒருமுறையாக ஆண்டு ஒன்றுக்கு நான்கு முறை வெளியாகும். (ஏறக்குறைய இதழ் ஒன்று 48 பக்கங்களுடன் வெளிவரும்.) நல்ல மேல் அட்டையுடன் கூடியிருக்கும்.

| | | | |
|---|---|---|---|
| ஆண்டுச் சந்தா | இந்தியா | ரூ. | 4 00 |
| ,, | வெளிநாடுகள் | ரூ. | 6 00 |
| ,, | தனிப் பிரதி | ரூ. | 1 00 |

ஒரு குறிப்பிட்ட அளவு பிரதிகளையே அச்சிடப்போவதால் விரோதிகிருது ஆண்டுக்குச் சந்தா செலுத்த விரும்புபவர்கள் ஒரு வருடச் சந்தாத் தொகையை நேரே நமது காரியாலயத்துக்கு 28-2-71க்குள் சேருமாறு அனுப்பிவிடுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள். மேற்கொண்டு சேரும் சந்தாக்களை கைவசம் இருக்கக் கூடிய பிரதிகளை அநுசரித்து சேர்த்துக் கொள்ளப் படும்.

திருப்புகழமிர்தம் மாத வெளியீட்டுக்காகச் செலுத்தப்பட்ட ஆயுள் சந்தாக்கள் இந்த சாதாரண ஆண்டோடு முடிவடையும். ஆக, வரும் விரோதிகிருது ஆண்டு முதல் ஆயுள் சந்தாதாரர் கிடையாது.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

# சிவனருட் செல்வர்

திருவருள் என்ற தங்கக் கம்பியில் எழுபத்தி ரண்டு நாயன்மார்கள் என்ற இரத்தினமணிகளைக் கோத்த மணிமாலை பெரிய புராணம். திருவருள் மயமானது இத்திருத்தொண்டர் புராணம். படிக் குந்தொறும் மனித இனத்தை உய்விப்பது பெரிய புராணம். பிறவிப் பெருங்கடலுக்குத் தோணி யனையது. மனத்தளர்ச்சிக்கு ஆணியனையது. சிவ கதிக்கு ஏற்றும் ஏணியனையது. சிவனருட் செல்வர் என்னும் இத்தகு வித்தகத்தெய்வத் திருநூலை உரை நடையாகவும் இன்றியமையாத பாடல்களுடனும் சிறந்த உவமை நயங்களுடனும் தக்க சான்றுகளுட னும் யாத்துள்ளேன். வானோரும் போற்றும் இதனை ஏனோரும் படித்துப் பயன்பெறும் பதிபுண்ணியச் செயலாக வானதி பதிப்பகத்தார் இப்போது வெளி யிடுகின்றார்கள்.

இந்த அரிய பெரிய அருள்மணி மாலையை எல் லோரும் அணிந்து, சிவத்தைப் பணிந்து, வினை தணிந்து உய்வு பெறுக. வாழ்க உலகெலாம்.

அன்பன்
**கிருபானந்தவாரி**

உ

ஓம் குஹாய நம !



ACC-NO-34332

# திருப்புகழமிர்தம்

"திருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றாள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"




| மலர் 35 | சாதாரணஹூ—தை மீ<br>ஜனவரி 1971 | இதழ் 10 |
|---|---|---|


## திருப்புகழ்

### திருவருணை

திருட்டு வாணிப விக்ரம துட்டிகள்
மதத்த ரூபிகள் துர்ச்சன பொட்டிகள்
செகத்து நீலிகள் கெட்டப ரத்தைகள் மிகநாணூர்
சிலைக்கு நேர்புரு வப்பெரு நெற்றிக
ளெடுப்பு மார்பிக ளெச்சிலு தட்டிகள்
சிரித்து மானுடர் சித்தமு ருக்கிகள் விழியாலே
வெருட்டி மேல்விழு பப்பற மட்டைகள்
மிகுத்த பாவிகள் வட்டமு கத்தினை
மினுக்கி யோலைகள் பித்தளை யிற்பணி மிகநீறுல்
விளக்கி யேகுழை யிட்டபு ரட்டிகள்
தமக்கு மால்கொடு நிற்கும ருட்டனை
விடுத்து நானொரு மித்திரு பொற்கழல் பணிவேனோ
தரித்த தோகண தக்கண செக்கண
குகுக்கு கூகுகு குக்குகு குக்குகு
தகுத்த தீதிகு தக்குகு திக்குகு எனதாளந்

தடக்கை தாளமு மிட்டியல் மத்தள
மிடக்கை தாளமு மொக்கந டித்தொளி
தரித்த கூளிகள் தத்திமி தித்தென கணபூதம்

அருக்க ஞரொளி யிற்ப்ரபை யுற்றிடு
மிரத்ந மாமுடி யைக்கொடு கக்கழ
லடக்கை யாடிநி ணத்தையெ டுத்துண அறவேதான்

அரக்கர் சேனைகள் பட்டுவி ழச்செறி
திருக்கை வேல்தனை விட்டரு ளிப்பொரும்
அருட்கு காவரு ணைப்பதி யுற்றருள் பெருமாளே.

## பதவுரை

தரித்த தோகண தக்கண செக்கண குகுக்கு கூகுகு குக்குகு குக்குகு தகுத்த திதிகு தக்குகு திக்குகு என தாளம் = தரித்த தோகண...தக்குகு திக்குகு என்ற ஒலியுடன் தாள பேதங்களை, தடகை தாளமும் இட்டு = பெரிய கைகளால் தாளமிட்டும், இயல் மத்தளம் = பொருந்திய மத்தளம், இடக்கை = இடக்கையால் கொட்டும் ஒரு தோற்கருவி, தாளம் = தாளம் என்ற இவையெல்லாம் ஒலிக்க, ஒக்க நடித்து = அத்தாளங்களுக்கு ஏற்ப நடனஞ் செய்து, ஒளி தரித்த கூளிகள் = ஒளியுடன் கூடிய பேய்கள், தத்திமி தித்தென = தத்திமி தித்தெனவும், கண பூதம் = கூட்டமான பூதங்கள், அருக்கன் ஆர் ஒளியில் ப்ரபை உற்றிடும் = சூரியனுடைய நிறைந்த ஒளிபோல ஒளி வீசும், இரத்ன மாமுடியை கொடு = இரத்தினங்கள் பதித்த சிறந்த கிரீடங்களைக் கொண்டு, உக = அவை சிந்தும்படி, கழல் அட கை ஆடி = கழற்சிக் காய்களைக் கொண்டு விளையாடுதல்போல் வெற்றி பெறக் கையில் வைத்து விளையாடி, நிணத்தை எடுத்து உண = மாமிசத்தை எடுத்து உண்ணும்படியும், அறவேதான் = அடியுடன் அற்றுப் போய், அரக்கர் சேனைகள் பட்டு விழ = அசுரருடைய சேனைகள் அழிந்து விழவும், திருக்கையில் செறி வேல் தனை = திருக்கரத்தில் கொண்டுள்ள வேலாயுதத்தை, விட்டு அருளி பொரும் = செலுத்தியருளிப் போர் செய்த, அருள் குகா = கருணை நிறைந்த குகப் பெருமானே! அருணைப்பதி உற்று அருள் = திருவண்ணமலைத் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! திருட்டு வாணிபம் = திருட்டு வியாபாரம் செய்வதில் விக்ரம துட்டிகள் = சாமர்த்தியங் கொண்ட துஷ்டர்கள், மதத்த ரூபிகள் = ஆணவத்தின் வடிவானவர்கள், துர்ச்சன பொட்டிகள் = தீயவருடன் பழகும் உள்ளீடு இல்லாதவர்கள், செகத்து நீலிகள் = இவ்வுலகில் மிகவும் தந்திரவாதிகள், கெட்ட பரத்தையர் = கெட்டுப் போன

பரத்தைமார்கள், மிக நாணர்=மிகவும் நாணம் இல்லாதவர்கள், சிலைக்கு நேர் புருவம் பெரு நெற்றிகள்=வில்லைப் போன்ற புருவத்தையும் விசாலமான நெற்றியையும் உடையவர்கள், எடுப்பு மார்பிகள்=முன்னுக்கு விளங்கும் மார்பினை யுடையவர்கள், எச்சில் உதட்டிகள்=எச்சில் செய்த உதட்டை யுடையவர்கள், சிரித்து மாநுடர் சித்தம் உருக்கிகள்=சிரிப்பதனாலேயே ஆண் மக்களுடைய உள்ளத்தை உருக்குபவர்கள், விழியாலே வெருட்டி=கண்களால் அஞ்ச வைத்து, மேல் விழு பப்பற மட்டைகள்=மேல் வீழ்ந்து கூத்தாடும் பயனிலிகள், மிகுத்த பாவிகள்=மிகுந்த பாவஞ் செய்தவர், வட்ட முகத்தினை மினுக்கி=வட்ட முகத்தை மினுக்கி, ஓலைகள் பித்தளையில் பணி=காதோலைகள் பித்தளையினால் ஆன நகைகளை, மிக நீறால் விளக்கியே=அதிக சாம்பலிட்டு விளக்கஞ் செய்து, குழை இட்ட புரட்டிகள்=குழையாகக் காதில் தரித்த மாறுபட்ட பேச்சினை யுடையவர்கள், தமக்கு=இத்தகைய பொது மாதர்களின் மீது, மால் கொடு நிற்கும்=காதல் கொண்டு நிற்கும், மருள் தனை விடுத்து= மயக்கத்தை விட்டு, நான் ஒருமித்து=அடியேன் ஒருமைப்பாட்டை யடைந்து, இரு பொன்கழல் பணிவேனோ=உமது அழகிய இரு திருவடிகளை வணங்குவேனோ?

## பொழிப்புரை

தரித்த தோகண தக்கண செக்கண குகுக்கு கூகுகு குக்குகு குக்குகு தகுத்த தீதிகு தக்குத திக்குகு என்ற ஒலியுடன் கூடிய தாளபேதங்களை பெரிய கைகளால் தாளம் போட்டும், அதற்கு இணங்கிய மத்தளம், இடக்கை, தாளம் முதலிய வாத்தியங்கள் முழங்கவும், அதற்கு ஏற்ப நடனம் புரிந்து, ஒளி மிக்க பேய்கள் தத்திமி தித்தென்று ஒலிக்கவும், கூட்டமான பூதங்கள், சூரியனுடைய நிறைந்த ஒளிபோல் ஒளிவீசும் இரத்தின மணிகள் பதித்த கிரீடங்களைக் கொண்டு, அதில் உள்ள மணிகள் சிந்தும்படி, கழற்சியைக் காயைப்போல் வெற்றி பெறக் கையில் வைத்து விளையாடி, மாமிசங்களை எடுத்து உண்ணும்படியும் அடியுடன் அற்றுப்போய், அசுர சேனைகள் அழிந்து விழுமாறும், திருக்கையில் கொண்டுள்ள வேலாயுதத்தைச் செலுத்திப் போர் செய்தருளிய கருணைமிகுந்த குகப்பெருமானே! திருவண்ணாமலைத் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள பெருமித முடையவரே! திருட்டு வியாபாரஞ் செய்வதில் வல்ல துஷ்டைகள்; ஆணவத்தின் வடிவமானவர்கள்; தீயவர்களுடன் பழகும் உள்ளீடில்லாதவர்கள்; இந்த வுலகில் மிகவுந் தந்திரசாலிகளான கெட்டுப்போன பரத்தைமார்கள்! மிகவும்

வெட்கம் இல்லாதவர்கள்; வில்லைப்போன்ற புருவமும் விசால மான நெற்றியையும் உடையவர்கள்; எடுப்பான மார்பையுடைய வர்கள்; எச்சில் செய்யப்பட்ட உதட்டையுடையவர்கள் சிரிப் பினாலேயே ஆண்களின் உள்ளத்தை உருக்குபவர்கள்; கண் களால் அஞ்சும்படி செய்து, மேலே வீழ்ந்து கூத்தாடும் பயனி லிகள்; மிகுந்த பாவத்தைச் செய்தவர்கள்; வட்டமான முகத்தை மினுக்கி, காதில் உள்ள பித்தளை ஓலைகளை, மிகுந்த சாம்பலால் விளக்கிக் காதில் அணிந்து புரட்டும் பேர்வழிகள் ஆகிய விலைமாதர்மீது காதல் கொண்டு நிற்கும் அடியேன், அந்த மயக்கத்தை விடுத்து ஒருமைப்பாட்டை யடைந்து, தேவரீருடைய அழகிய இரு சரணாரவிந்தங்களை வணங்கும் பேற்றினை அடைவேனோ ?

## விரிவுரை

இந்தத் திருப்புகழில் விலைமாதருடைய தன்மைகளை விரித்து அடிகளார் கூறுகின்றார்.

**வட்ட முகத்தினை மினுக்கி ஓலைகள் பித்தளையிற் பணி மிகநீறால் விளக்கியே குழையிட்ட புரட்டிகள் :—**

பொது மாதர்கள் பித்தளையாற் செய்த காதணிகள், கை வளைகள், கழுத்துச் சங்கிலிகள் இவைகளைச் சாம்பலினால் மினுக்கித் தரித்துப் புரட்டு வித்தைகளைச் செய்வார்கள்.

**முட்டற்ற மஞ்சளை யெண்ணெயிற்கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளை யோலை விளக்கியிட்டுப்
பட்டப் பகலில் வெளிமயக் கேசெயும் பாவையர்மேல்
இட்டத்தை நீதவிர்ப் பாயிறை வாகச்சி ஏகம்பனே.**

—பட்டினத்தார்.

**மால்கொடு நிற்கு மருட்டனைவிடுத்து :—**

மால்—மயக்கம். காமத்தால் வரும் மயக்கம். மண்ணா சையும் பொன்னாசையும் மனிதப் பிறவிக்கு மட்டுமே யுண்டு; பெண்ணாசை எல்லாப் பிறவிகளிலும் தொடர்ந்து வருவது. இது மிகவும் வன்மையானது.

ஆதலால் காமனை யெரித்த கண்ணிலிருந்து ஞானச் சுட ராக வந்த முருகப் பெருமானை வேண்டி இதனை யகற்றவேண் டும் என்கின்றார் அடிகளார்.

ஒருமித்து :—

ஒருமைப்பாடுதான் மனிதனை உய்விக்கும். பலப்பல நெறிகளில் சென்று இடர்ப்படக் கூடாது. ஒருமை நெறி இருமையுந்தரும்.

''ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்''
—தேவாரம் (சம்பந்தர்)

''ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக் கின்ற
உத்தமர் தம் உறவு வேண்டும்'' —திருவருட்பா.

இரு பொற்கழல் பணிவேனே :—

இறைவனுடைய திருவடி ஞானமே யாகும். ''ஞானக் கழலோனே'' என்ற திருப்புகழாலும், ''ஞானமேயான சேவடி யுடையாய்'' என்ற வில்லிபாரதத்தாலும் அறிக. பரஞானம் அபரஞானம் என்ற இருஞானங்கள் இரு திருவடிகள்.

''உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்''
—பெரியபுராணம்.

ஞானமேயாய திருவடியைப் பணிதல் வேண்டும். அவ்வாறு பணிந்தால் அஞ்ஞானம் தானே நீங்கும். விளக்கினை யேற்றினுல் இருள் தானே நீங்குமாப்போல் எனத்தெளிக.

…………''கணபூதம் அருக்கனு ரொளியிற் ப்ரபை யுற்றிடு மிரத்ந
மாமுடியைக் கொடுகக் கழலடக்கை யாடி'' :—

போர்க்களத்தில் பூதகணங்கள் அசுரர்களின் மணிமகுடங்களை கழற்சிக்காய்களைக் கொண்டு இமைகளில் விளையாடுவது போல் விளையாடினவாம்.

பூதங்கள் ரத்தின முடிகளின் ரத்னங்களைக் கொண்டு ஒற்றையா ? இரட்டையா ? என்னும் விளையாட்டைப் பந்தயம் போட்டுக்கொண்டு விளையாடின. பூதவேதாள வகுப்பிலும் அடிகளார் அழகாகக் கூறுகின்றார்.

''யுத்தகளத் தினில் ரத்ன மணிக்குவை
ஒட்டரோ யொற்றை யிரட்டை பிடிப்பன''

வேலதனை விட்டருளிப் பொரும் அருட் குகா :—

முருகவேள் சூராதி யவுணர்கள்மீது வேலை யேவிப் போர் புரிந்தது மறக்கருணையாகும். தந்தை மைந்தனைக் கண்டிப்பது போலாகும்.

இது கருணையின் செயல் என்று விளக்கும் பொருட்டு "விட்டருளி" என்றார். "அருட்குகா" என்றார்.

### கருத்துரை

அருணைமேவும் அண்ணலே! மாதர் மயக்கற்று, உன் மலரடி வணங்க அருள் செய.

## திருப்புகழ்

தேதென வாச முற்ற கீதவி னோத மெச்சு
தேனளி சூழ மொய்த்த மலராலே
சீறும ராவெ யிற்றி லூறிய காளம் விட்ட
சீத நிலாவெ றிக்கு மனலாலே
போதனை நீதி யற்ற வேதனை வாளி தொட்ட
போர்மத ராஜ னுக்கு மழியாதே
போக மெலாநி றைத்து மோக விடாய்மி குத்த
பூவையை நீய ணைக்க வரவேணும்
மாதினை வேணி வைத்த நாதனு மோது பச்சை
மாயனு மாத ரிக்கு மயில்வீரா
வானவர் சேனை முற்றும் வாழம ராப திக்குள்
வாரண மான தத்தை மணவாளா
மேதினி யோர்த ழைக்க வேயரு ணாச லத்து
வீதியின் மேவி நிற்கு முருகோனே
மேருவை நீறெ ழுப்பி நான்முக னார்ப தத்தில்
வேலடை யாள மிட்ட பெருமாளே.

### பதவுரை

மாதினை வேணி வைத்த நாதனும்=கங்கை யென்ற பெண்ணைச் சடையில் வைத்துள்ள தலைவராகிய சிவபெருமானும், பச்சை மாயனும்=பச்சை நிறமுள்ள நாராயணரும், ஆதரிக்கும்=விரும்புகின்ற, மயில் வீரா=மயிலின்மீது வரும் வீரமூர்த்தியே, வானவர் சேனை முற்றும் வாழ்=தேவர்களின் சேனைகள் அனைத்தும் வாழ்கின்ற, அமராபதிக்குள்=அமராவதியென்ற இந்திரனுடைய நகரில் இருந்த, வாரண=ஐராவத யானையால் வளர்க்கப் பெற்ற, தத்தை=கிளி போன்ற தெய்வயானை யம்மையின், மணவாளா=கணவரே, மேதினியோர் தழைக்கவே=உலகிலுள்ளோர் செழிப்புற்று ஓங்கும்

பொருட்டு, அருணசலத்து வீதியில்=திருவண்ணமலையின் திருவீதியில், மேவி நிற்கும்=விரும்பி வீற்றிருக்கும், முருகோனே=முருகக் கடவுளே! மேருவை நீறு எழுப்பி=மேருமலையைப் பொடியாக்கி, நான்முகனர் பதத்தில்=பிரமதேவனுடைய காலில், வேல் அடையாளம் இட்ட=வெற்றிக்கு அடையாளமாக விலங்கு பூட்டிய, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! தேது என=ஒளியுடையதாய், பாசம்=நறுமணம் கொண்டதாய், கீத விநோதம் மெச்சும்=இசை விநோதங்களை விரும்பி, தேன் அளி சூழ மொய்த்த=தேன் உண்ணும் வண்டுகள் சூழ்ந்து மொய்த்துள்ள, மலராலே=மலர்களாலும், சீறும் அரா எயிற்றில்=கோபித்து எழும் பாம்பின் பல்லில்=ஊறிய காளம் விட்ட=ஊறிய நஞ்சினைக் கக்குகின்ற, சீத நிலா எறிக்கும்=குளிர்ந்த சந்திரன் வீசுகின்ற, அனலாலே=நெருப்பினுலும், போதனே=பூவில் வாழ்பவனும், நீதி அற்ற வேதனே=நீதியில்லாதவனுமான பிரமன்மீது, வாளி தொட்ட=மலர்க்கணைகளைத் தொடுத்த, போர் மத ராஜனுக்கும்=போரில் வல்ல மன்மத ராஜனுலும், அழியாதே=நான் அழியாத வண்ணம், போகம் எலாம் நிறைத்து=இன்பங்கள் அனைத்தும் நிறையத் தந்து, மோக விடாய் மிகுத்த பூவையை=உம்மீது ஆசைவிடாய் மிகுந்துள்ள இந்தப் பெண்ணை, நீ அணைக்க வரவேணும்-தேவரீர் தழுவும் பொருட்டு வரவேணும்.

## பொழிப்புரை

கங்காதேவியைச் சடைமீது வைத்துள்ள சிவபெருமானும், பச்சைநிறமுள்ள திருமாலும் விரும்புகின்ற மயில் வீரமூர்த்தியே! தேவ சேனைகள் யாவும் வாழுகின்ற அமராவதி என்ற நகரத்தில் ஐராவத யானையால் வளர்க்கப் பெற்ற தேவசேனையின் கணவனுரே! உலக மக்கள் தழைத்து ஓங்கும் பொருட்டு திருவண்ணமலையின் திருவீதியில் எழுந்தருளியுள்ள முருகக் கடவுளே! மேருமலையைப் பொடியாகச் செய்து, பிரமதேவனுடைய காலில் வெற்றிக்கு அடையாளமாக விலங்கு பூட்டிய பெருமிதமுடையவரே! ஒளியும் வாசனையுமுடையதாய், இசை விநோதங்களை விரும்பித் தேன் உண்ணும் வண்டுகள் சூழ்ந்து மொய்த்துள்ள மலர்களாலும், சீறி எழும் பாம்பின் பற்களில் ஊறுகின்ற நஞ்சினைப்போன்ற நிலா வீசுகின்ற நெருப்பினுலும், பூவில் வாழுகின்றவனும் நீதியில்லாதவனுமான பிரமதேவன்மீது மலர்க்கணை ஏவிய போரில் வல்ல காமராஜனுலும் நான் அழியாதவண்ணம், இன்பம் அனைத்தும்

நிறையத் தந்து, உம்மிடம் காமவிடாய் கொண்ட இந்தப பெண்ணை அணைக்கும் பொருட்டு தேவரீர் வந்தருளவேணும்.

## விரிவுரை

இத் திருப்புகழ் அகப்பொருள் சம்பந்தமானது.

**தேதென :—**

"தேது என" தேது—ஒளி.

"தேதெரி அங்கையில் ஏந்தியாடும்" —சம்பந்தர் *3-101-4*

**கீதவிநோத பேச்சு தேனளி :—**

அளி—வண்டு. வண்டுகள் தேன் உண்ணும் பொருட்டு மலர்களிடம் போய் இசை விநோதங்களைப் பாடும். அந்த இசையால் மலர்கள் விரியும்.

சில சாதுக்கள் இறைவனுடைய நாமங்களைப்பாடிக் கொண்டே பிச்சைக்கு வருவது கண்கூடு.

"தெனத் தெனந்தன எனவரி யளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுபர் பொழில்"
—(உனைத்தினம்) திருப்புகழ்.

....................."நீளும் வரியளி
சீராகமோது நீபபரிமள இருதாளும்" —(சீரான) திருப்புகழ்.

**சீறுமரா வெயிற்றி லூறிய காளம்விட்ட சீதநிலா வெறிக்க மனலாலே :—**

தலைவன் மீது விரகதாபங் கொண்ட தலைவிக்கு குளிர்ந்த நிலா அனல் வீசுவதுபோல் இருக்கும்; சீதளமாக விளங்கும் சந்திரன், பாம்பின் பல்லில் ஊறிய நஞ்சினை யொத்த அனலை வீசுமாப்போல் இருக்குமாம்.

**போதனை நீதியற்ற வேதனை வாளிதொட்ட மாமதராஜன் :—**

போதன்—பூவில் வாழ்பவன். போது—மலர். போது அறிந்து மலர்வதனால் மலருக்குப் போது எனப் பேர் அமைந்தது தானே படைத்த திலோத்தமையைக் கண்டு மயங்கிக் காதல் கொண்டதனால் நீதியற்ற பிரமன் என்றார். மன்மதன் பிரமன் மீது மலர்க்கணை யேவி தன் ஆட்சியைச் செலுத்துகின்றான்.

தன் உடன்பிறந்த அண்ணன் மீதே கணை சொரிந்த மன்மதனுக்கு அபலையான நான் எம்மாத்திரம் ?

**போகமெலா நிறைத்த :—**

முருகா! உன்னை விரும்புகின்ற பெண்ணாகிய எனக்கு இன்பங்கள் யாவும் தந்து மகிழச் செய்.

**மோகவிடாய் மிகுத்த பூவை :—**

"முருகா! உன்மீது கொண்ட ஆசையின் மிகுதியால் விடாய் கொண்டு தவிக்கின்றேன்.

**பூவையை நீயணைக்க வரவேணும் :—**

"பூவை போன்ற பெண்ணாகிய என்னை மருவும் பொருட்டு தேவரீர் வந்தருளவேண்டும்" என்று அருணகிரிநாதர் இப் பாடலில் முறையிடுகின்றார்.

**மாதினை வேணிவைத்த நாதன் :—**

மாது—கங்காதேவி. உமாதேவி இறைவனுடைய திருக் கண்களைப் புதைத்தபோது, பிராட்டியாருடைய திருவிரல்களி லிருந்து கங்கை தோன்றினாள். அந்த வெள்ளம் உலகங்களை யெல்லாம் அழிக்கலாயிற்று. அப்பெரு வெள்ளத்தைச் சிவ பெருமான் தன் சடையில் தாங்கி உலகங்கட்கெல்லாம் அருள் புரிந்தார்.

சிவபெருமான் கங்கையைச் சூடிய தன்மை, அவருடைய ஆற்றலையும் கருணையையுங் குறிக்கின்றது.

**மேதினியோர் தழைக்கவே யருணாசலத்து வீதியில் மேவிநிற்கு முருகோனே :—**

தத்தம் இடத்தில் இருந்தவாறே காதலாகிக் கசிந்து நினைப் பவர் எல்லோருக்கும் முத்தியளிக்குந் திருத்தலம் திருவண்ணா மலை. ஆலயத்திற் சென்று சேவிக்கும் முயற்சியும் ஊக்கமும் இல்லாதவர்களும் தன்னை வணங்கி நலம்பெற வீதியிலேயே வேலவன் எழுந்தருளியிருக்கின்றான்.

**மேருவை நீறெழுப்பி :—**

மதுரையில் பஞ்சம் வந்தபோது உக்கிரப் பெருவழுதி பொன் மேருகிரியை யடைந்து பொன் வேண்ட, அது தரா தொழிந்ததால் வேல்விட்டு மேருவைப் பொடி செய்தார். இது திருவிளையாடலில் உள்ள வரலாறு.

**"நேமிச் சூரொடு மேருத் தூளெழ"**

**—(சேமக்கோமள) திருப்புகழ்:**

உ
முருகா

# கற்பு

## முத்தாவலி

முத்தாவலி தன் அறையில் அமர்ந்து படித்துக் கொண்டிருந்தாள். படிப்பிலே அதிக அக்கறை யுடையவள். பொறுமையும் அமைதியும் உடைய அவள் முகமண்டலத்தில் ஞானவொளி வீசும். கண்கள் நீலோற்பல மலர்போல் வசீகரிக்குந் தன்மையுடையவாய் விளங்கின.

அம்புஜம்மாள் சாய்வு நாற்காலியில் அமர்ந்துள்ள கணவனுருக்குக் காபி கொணர்ந்து கொடுத்தாள். சேதுராம ஐயர் காபியை ஆற்றிக் குடித்துக் கொண்டிருந்தார்.

"இப்படிச் சாப்பிட்டுச் சாப்பிட்டு இடிச்சபுளி மாதிரி உட்கார்ந்திருக்கின்றீரே? முத்தாவுக்கும் வயது 22 ஆகின்றதே. எப்போது கல்யாணம் செய்கின்றது? எல்லாம் காலத்தில் செய்தால்தானே நன்ருயிருக்கும்? உமக்குக் கொஞ்சங்கூட அக்கறையில்லையே? நான் பெண்பிள்ளை என்ன செய்வேன்?" என்ருள் அம்புஜம்.

சேதுராமையர், "அம்புஜம்! சும்மா கத்தாதே. நான் சும்மா தூங்கிக் கொண்டிருக்கின்றேன் என்று எண்ணுகின்ருயா? பகீரதப் பிரயத்னம் பண்ணுகின்றேன். எல்லாம் வேளை வந்தால் தானே ஆகும். நம்மால் ஆகக் கூடியது என்ன இருக்கின்றது?

"அடுத்து முயன்ருலும் ஆகுநா ளன்றி
எடுத்த கருமங்கள் ஆகா"

என்று ஔவையார் பாடியிருக்கின்ருர். நம்ம பெண்ணுக்குப் படிப்பு இருக்கின்றது. P.U.C. பாஸ் பண்ணி யிருக்கின்ருள். அழகு இருக்கின்றது; அறிவு இருக்கின்றது. எல்லாம் இருந்தும் வரன் கைகூடி

---

நான்முகனுர் பதத்தில் வேலடையாளமிட்ட :—

பிரமதேவனுடைய காலில் தமது வெற்றிக்கு அடையாளமாக முருகன் விலங்கு பூட்டிச் சிறையில் அடைத்தருளினுர்.

கருத்துரை

திருவருணை மேவுந் தேவனே! உன்னை விரும்பும் பெண்ணுகிய என்னை தழுவிக்கொள்ள வரவேணும்.

வரவில்லை! வரதட்சிணை வரம்புக்கு மீறி சிலர் கேட்கின்றார்கள். நாம் மகள் கல்யாணத்துக்கு என்று மூன்று ஆயிரந்தான் சேர்த்து வைத் திருக்கின்றோம். B.E. படித்த மாப்பிள்ளை முப்பதினாயிரம் கேட் கின்றான். B.A. B.L. படித்தவன் நாற்பதினாயிரங் கேட்கின்றான். M.B.B.S. படித்தவன் ஐம்பதினாயிரம் கேட்கின்றான். அவர்கள் செல வழித்த பணம் முழுவதையும் நம்மிடம் வசூலிக்க எண்ணுகின்றார் கள். கடவுள் நமக்கு ஏகபுத்திரியைத் தந்தார். அதற்கு நாம் ஆண்டவனுக்கு அளவற்ற நன்றி செலுத்த வேண்டும். ஐந்து, ஆறு பெண்களைக் கொடுத்திருந்தால் நம்ம கதி என்ன ஆகும்? நானும் பலரிடம் சொல்லியுளேன். ஆண்டவன்தான் கருணை காட்ட வேண்டும்'' என்றார்.

முத்தாவலி அங்கே வந்து ''அப்பா! நீங்கள் கவலைப்பட வேண்டாம். எனக்குக் கல்யாணமே வேண்டாம். எங்காவது ஒரு வேலை பார்த்துக் கொள்ளுவேன். நான் உழைத்து உங்களைக் காப் பாற்றுவேன். என்னைப் பார்க்க வருகின்றவர்கள் எல்லாம் பணம் பணம் என்று கேட்கின்ற பணப் பேய்களாகத்தான் காட்சி தரு கின்றார்கள். பணத்திலேயே நாட்டம் இருக்கின்றவர்களிடம் குணம் இருக்காது'' என்றாள்.

முத்தாவலியின் அத்தை மகன் இளமையில் அவளுடன் விளை யாடிக் கொண்டிருந்தான். இவள் அவனைத் தன் உயிரினும் அதிக மாக நேசித்து வந்தாள். அவன் பேர் ரங்கநாதன். முத்தாவலி ''நாதன்! நீயே எனக்கு நாதன்'' என்பாள். அவனுடன் பலப்பல வேடிக்கைக் கதைகளைக் கூறுவாள்.

ரங்கநாதன் மேல்படிப்புக்காக தாயாரிடமும் தாய்மாமன் சேது ராமையரிடமும் விடைபெற்றுக் கொண்டான். கடைசியாக முத்தாவலியைப் பார்த்து, ''முத்தா! நான் அமெரிக்கா போகின் றேன். படிப்பை முடித்து வருவேன். நீ என்னை மறந்துவிடாதே. இந்தா! இதை என் ஞாபகார்த்தமாக வைத்துக்கொள்'' என்று தன் கழுத்திலிருந்த நவரத்ன மாலையைக் கழற்றி முத்தாவலி கழுத்தில் போட்டான். முத்தாவலி அவனை விழுங்கிவிடுவது போல் பார்த் தாள். அப்போது அவளுக்கு வயது பதினைந்து. அவளுடைய கண்கள் குளமாயின.

''நாதன்! நீ அமெரிக்கா போனால் அங்கேயே யிருந்து விடமாட் டாயே? சிலர் அங்கேயே தங்கி விடுவார்கள்'' என்று கேட்டாள்.

''முத்தா! நான் தாயாரைத் தெய்வமாக நினைப்பவன். அம்மா! என்னை நினைத்து ஏங்கிவிடுவாள். அவளுக்கு நான் ஒரே மைந்தன் ஆதலால் நிச்சயமாகப் படிப்பு முடிந்தவுடன் வந்துவிடுவேன். அன்றியும் என் உயிர் நீதானே. வெறும் உடம்புதானே நான்.

உயிரைவிட்டு உடம்பு பிரிந்திருக்குமா? தாய்க்குப் பின் தாரம். என்னை மறந்தாலும் மறப்பேன்; முத்தா! நான் உன்னை மறப்பேனா? மறந்தால் என் உயிர் பிரிந்துவிடும். நீ அழாதே. சந்தோஷமாக இரு. என்னை வாழ்த்தி வழியனுப்பு. முத்தா! அமெரிக்காவிலே படித்துக் கொண்டே பணமும் சம்பாதிக்க வழியுண்டு. அது செல்வங் கொழிக்கின்ற நாடு. எனவே நான் படிப்புடன் மட்டும் வரமாட்டேன். பணத்துடனும் வருவேன்.

"நாதன்! வேண்டாம். பணத்துடன் வந்தால் நான் உன்னை வரவேற்கமாட்டேன். குணத்துடன் வா. சிலர் அயல்நாட்டுக்கு ஒத்தையாகப் போய் இரட்டையாக, எள்ளும் பச்சரிசியும் சேர்ந்து வருவது போல் வருவார்கள். அந்தக் கோஷ்டியில் சேரக்கூடாது. ஒரு மனிதன் கால் போய் வாழ்வான்; கை போய் வாழ்வான்; கண் போய் வாழ்வான்; காது போய் வாழ்வான்; பணம் போய் வாழ்வான்; மனைவி மக்கள் போய் வாழ்வான்; ஆனால் உயிர் போய் வாழமாட்டான். ஆகவே எல்லாவற்றையும்விட உயிர் மேலானது. நாதன்! நான் சொல்வதை நன்றாகக் கேட்டுக் கொள். இந்த உயிரினும் மேலானது ஒன்று உண்டு. அதுதான் ஒழுக்கம்.

"ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்"

என்கின்றார் வள்ளுவர்; உயிரினும் என்ற சொல்லில் வரும் உம்மை—சிறப்பும்மை. ஒழுக்கம் வழுவாதவர்கள் மறைந்த பின்னும் இந்தவுலகில் நிறைந்தவர்களாகத் திகழ்வார்கள். இந்தத் திருக்குறள் உன் உள்ளத்தில் வேரூன்றி இருக்கட்டும். போய் வா" என்றாள்.

ரங்கநாதன் போகின்றபோது அவளுக்கு எல்லாமே போய் விட்டதாகத் தோன்றியது. அவள் இதயத்தில் ஒரு பாறாங்கல்லை வைத்து அழுத்துவது போல் இருந்தது. அவளுக்கு மண் சுழன்றது; விண் சுழன்றது; எண் சுழன்றது; கண் சுழன்றது. ஒருபோதும் அடையாத அல்லலை யடைந்தாள்.

ரங்கநாதன் அமெரிக்கா போய் படிப்படியாக மேல் படிப்பில் முன்னேறிக் கொண்டிருந்தான். மகனைப் பிரிந்த சோகத்தால் அவனுடைய தாயார் உண்ணாமலும் உறங்காமலும் ஏங்கினாள்; இளைத்து விட்டாள். முடிவில் இறைவனடியில் சேர்ந்து விட்டாள்.

சேதுராமையர் இச்செய்தியை அவனுக்கு அறிவித்தால் படிப்பு பாழாகிவிடும் என்று அறிவித்தாரில்லை. காலம் சுழன்று கொண்டே ஓடியது. நாள் போகப் போக ரங்கநாதனுக்கு சேதுராமையர் எழுதிய கடிதங்கள் திரும்பி வந்துவிட்டன. அவன் என்ன ஆனானோ? எங்கே போனானோ? மறைந்தே விட்டானோ? மறந்து கெட்டானோ? என்று எண்ணாத எண்ணங்களை யெல்லாம் எண்ணி எண்ணிப்

புண்ணுகிப் போனுர். பிறகு அவன் வருவான் என்ற நினைவையே விட்டுவிட்டார்.

முத்தாவலி நாதனை நினையாத நேரமே கிடையாது. அதனுல் தான் அவளுக்குக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும் என்ற விருப்பமும் இல்லை.

ஒருநாள் சேதுராமையர் வீட்டுக்கு ஒரு நண்பர் வந்திருந்தார். அவருடன் உரையாடிய சேதுராமையர், "அண்ணு! நம்ம முத்தா வுக்கு ஒரு வரன் பார்க்கக்கூடாதா? இந்த வருஷத்தில் எப்படியும் அவள் கழுத்தில் நூல் அணிய வேண்டும்" என்ருர்.

நண்பர், "சேது! எனக்குத் தெரிந்த ஒருவர் இருக்கின்ருர். அவ ருடைய பேர் சங்கரையர். அவர் மகன் M.Sc. பாஸ் செய்துள்ளான். காலேஜில் பிரின்சுபாலாக வேலை பார்க்கின்ருன். கைநிறையச் சம்பளம் வாங்குகின்ருன். நான் சங்கரையருடன் கலந்து சொல்லு கின்றேன்" என்ருர்.

நான்கு நாள் பொறுத்து அந்த நண்பர் சேதுராமையர் வீட்டுக்கு வந்தார். "சேது! நாளை வெள்ளிக்கிழமை; மாலை 5 மணிக்கு மாப் பிள்ளை வீட்டார் வருவார்கள். பெண்ணைப் பார்த்து, ஜாதகமும் பார்த்துப் பிடித்திருந்தால் முடித்துவிடலாம்" என்ருர்.

அதுபடியே வெள்ளிக்கிழமை மாலை வீடு பளபள என்று ஒழுங்கு பண்ணியிருந்தார் சேதுராமையர். அம்புஜம்மாள் பலகாரம் காபி தயார் செய்து வைத்தாள். ஆனுல் முத்தாவலி மட்டும் அகத்திலும் முகத்திலும் ஈயாடாமல் முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். தாயா ருக்கு மனம் நோகக்கூடாது என்று, அவள் வற்புறுத்தலுக்காக தலை வாரி பூச்சூடிக் கொண்டாள்.

குறித்த நேரத்தில் பிள்ளை வீட்டார்கள் தடபுடலாக ஒரு வாடகைக் காரில் வந்து இறங்கினுர்கள், சேதுராமையர் விழுந் தடித்துக் கொண்டு வேகமாக "வாருங்கள் வாருங்கள்" என்று வர வேற்ருர். எல்லோருக்கும் பாய் அன்பாய் விரித்து அமரச் செய்தார். மாப்பிள்ளை மிகவும் மிடுக்காக அமர்ந்திருந்தார்.

அம்புஜம்மாள் தட்டு தட்டாகப் பலகாரங்களை வைத்து பரி மாறினுள். கடைசியாக புள்ளிமான் துள்ளிவருவதுபோல் முத்தாவலி அன்னநடை நடந்து காப்பியைக் கொணர்ந்து வைத்தாள்.

அக்கட்டழகியைப் பார்த்த பிரின்சுபால் மதுவுண்ட வண்டு போல் மயங்கினுன். முத்தாவலியின் முகத்தில் விளங்கும் கவர்ச்சி அவனைக் கிறக்கிவிட்டது. இமைகொட்டாது பார்த்தான். முத்தா வலி கடைக்கண்ணுல் மாப்பிள்ளையைப் பார்த்தாள். அவள் உள்ளத் தில் வெறுப்புதான் விளைந்தது.

பின்னர் அங்கு தற்செயலாய் வந்த சோதிடரிடம் இரு ஜாதகங்களையும் கொடுத்துப் பார்த்தார்கள்.

ஜோதிடர், "இந்தப் பெண் ஜாதகம் நிரம்ப உயர்ந்தது. வாக்கு ஸ்தானத்தில் வியாழன் உச்சம். சுக்கிரன் உச்சம். இந்தப் பெண்ணைக் கைபிடித்தவன் குபேர சம்பத்துடன் வாழ்வான். மாப்பிள்ளை ஜாதகமும் நன்ருக அமைந்துளது. கணப்பொருத்தம் ரஜ்ஜு பொருத்தம் முதலிய சகல பொருத்தங்களும் இருக்கின்றன" என்ருர்.

சேதுராமையர் சம்பந்தியாகப் போகும் சங்கரையரைப் பார்த்து, "இனி யான் என் செய்ய வேணும்?" என்று கேட்டார்.

சங்கரையர் "பையன் M.sc. படித்தவன். காலேஜில் பிரின்ஸ்பாலாக இருக்கின்ருன். ஆதலால் நான் ஒன்றும் அதிகம் கேட்கமாட்டேன். எனக்கு ஆசையே கிடையாது. பெண் வீட்டார் சிரமம் எனக்குத் தெரியும். கல்யாணம் நீங்கள் செய்துவிட வேண்டும். எழுபத்தைந்து பவுனில் நகை போட்டால் போதும். வைரத் தோடு வைர மூக்குத்தி போட்டால் போதும். பையனுக்கு ட்ரஸ்ஸுக்கு ஆயிரம் தந்துவிடுங்கள். வெள்ளிச் சாமான் எவர்சில்வர் சாமான் வாங்கித் தந்துவிடுங்கள். கையில் ரொக்கமாக முப்பதினுயிரம் தந்துவிடுங்கள். எனக்கு அதிகம் கேட்க மனம் வரவில்லை, உங்களை நான் அதிகம் கேட்க மாட்டேன்" என்ருர்.

சேதுராமையர் நடுங்கினுர்; திடுக்கிட்டார். நாக்குழறியது.

"நீங்கள் சிறிது என் சொல்லைக் கேட்க வேண்டும். அவ்வளவுக்கு நான் தாங்கமாட்டேன். சிறிது சிறிதாக மூன்று ஆயிரம் சேர்த்து வைத்துளேன். பெரிய மனம் வைத்து என் அளவு தெரிந்து இணங்கிப் போக வேணும்" என்ருர்.

சங்கரையர் "உங்களுக்கும் எனக்கும் வெகுதூரம், இது சரிப்படாது. கிட்டு! எழுந்திரு. இது கிட்டாது. வா, போகலாம்" என்ருர். கிட்டுவுக்கு பெண்ணின்மீது காதல். இடையிலே தந்தை யாருடைய மோதல். திகைத்தான். உடன் வந்த நண்பர் நீண்ட நேரம் இரு திறத்தாருடன் பேசி ஒருவாறு வழிசெய்தார். இப்போது மூவாயிரந் தந்துவிட வேணும், முகூர்த்தத்துக்கு முன் ஏழு ஆயிரம் தந்துவிட வேணும். கல்யாணம் பெண் வீட்டார் அவர்கள் விருப்பம் போல் செய்து கொள்ளட்டும்" என்று முடிவு செய்தனர்.

முகூர்த்த நாள் பார்த்து திருமணப் பத்திரிகை எழுதினுர்கள். பத்திரிகை அச்சிட்டு உற்ருர் நண்பர் முதலியோருக்கு அனுப்பினுர்கள்.

திருமண வேலைகள் சுறுசுறுப்பாக நடந்து கொண்டிருந்தன. சேதுராமையர் தான் குடியிருக்கும் வீட்டை விலைக்குப் பேசினார். ஏழாயிரம் ரூபாய்க்கு விற்க முயன்றார்.

அம்புஜம்மாள் வீட்டை விற்றுவிட்டு நாம் எங்கு குடியிருப்பது என்று ஏங்கினாள். நம்மால்தானே அம்மா அப்பாவுக்கு இத்தனை சிரமம் என்று எண்ணி முத்தாவலி துன்புற்றாள்.

''அம்மா! எனக்குக் கல்யாணமே வேண்டாம். மாப்பிள்ளையின் அப்பா கோபக்காரர். புலிபோல் சீறுகின்றார். மாப்பிள்ளை முகத்தில் ஒருவித அன்போ களையோ யில்லை. எனக்கு இந்தக் கல்யாணத்தில் துளிகூட பிரியம் இல்லை. அப்பாவிடம் சொல்லிக் கல்யாணத்தை நிறுத்திவிடு'' என்றாள்.

அம்புஜம், "அடி அசடு! இது என்ன பேச்சு. கல்யாணப் பத்திரிகை அச்சாகி எல்லோருக்கும் அனுப்பியாயிற்று. இனிமேல் ஒன்றுஞ் செய்ய முடியாது. எல்லாம் விதிப்படி தானே நடக்கும். சும்மா இரு'' என்றாள்.

முத்தாவலிக்கு மிகுந்த வேதனை. இது என்ன சோதனை என்று வாடி வருந்தினாள். முருக வேளை நினைந்து உருகினாள்.

முதல் நாளே மாப்பிள்ளை வந்துவிட்டான். சம்பந்திகள் வந்து தடபுடலாக இறங்கினார்கள். மாப்பிள்ளை அழைப்பு நன்கு நடந்தது.

மறுநாள் மேளம் முழங்கியது. உறவினரும் நண்பர்களும் குழுமியிருந்தார்கள். மாப்பிள்ளை மணமேடையில் அமர்ந்திருந்தான். பிள்ளையின் பிதாவான சங்கரையர் சேதுராமையரைப் பார்த்து, "எங்கே ஏழாயிரம்?'' என்று உரத்த குரலில் கேட்டார். சேதுராமையர் "மன்னிக்க வேணும். வீட்டை விலை பேசிவிட்டேன். வாங்குகின்றவர் ஒரு வாரத்தில் பணந் தந்துவிடுவார். முகூர்த்தம் நடக்கட்டும். ஒரு வாரத்தில் பணம் வந்துவிடும். நான் ஒருபோதும் சொல் தவறமாட்டேன். பணத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்'' என்று தாழ்ந்த குரலில் கூறிக் கெஞ்சினார்.

''ஓய்! இது என்ன பித்தலாட்டம். நீ மனுஷ்யனா? அன்று நாம் பேசியது என்ன? இன்று நடப்பது என்ன? பேச்சுக்கு விலையென்ன? கிட்டு! எழுந்திரு. இந்த சம்பந்தமே வேண்டாம்'' என்று சிங்கம் கர்ஜிப்பதுபோல் கர்ஜனை செய்தார்.

கல்யாணப் பந்தல் அதிர்ந்தது. ஆண்களும் பெண்களும் திகைத்தார்கள். புரோகிதர் பேயறைந்தது போல் அயர்ந்துவிட்டார். கிட்டு கிறுகிறுத்தான்.

இந்த சமயத்தில் ஒரு கார் வந்தது. உயர்ந்த ஆடை யணிந்த ஒருவன் உள்ளே நுழைந்தான். ஏற்றமும் தோற்றமும் பொருந்திய அவனை எல்லோரும் உற்றுப் பார்த்தார்கள்.

வந்தவன் ''மாமா! நான் அமெரிக்காவிலிருந்து இன்றுதான் விமானத்தில் வந்தேன். நேரே உங்களைப் பார்க்க வந்தேன்'' என்றான் ரங்கநாதன்.

நடந்தது பூராவும் சேதுராமையர் கூறினார். ரங்கநாதன் சங்கரையரைப் பார்த்து, ''கல்யாணம் குறிப்பிட்டபடி நடக்கட்டும், பணத்துக்கு நான் பொறுப்பு'' என்றான்.

நாதனைக் கடைக்கண்ணால் பார்த்த முத்தாவலி கண்ணீர் சொரிந்தாள்.

சங்கரையர், ''ஓய் உன்னை யார் கண்டார்கள்: உனக்கும் இதற்கும் என்ன சம்பந்தம். உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ. பணம் வராமல் என் மகன் தாலி கட்டமாட்டான்'' என்று கூறி நரசிம்மத்தைப் போல் குதித்து மகன் கையைப் பிடித்து இழுத்தார்.

லக்னம் நெருங்கிவிட்டது. ரங்கநாதன் சேதுராமையரைப் பார்த்து, ''மாமா! தாங்கள் விரும்பினால் முத்தாவுக்கு நானே திருமாங்கல்யம் சூட்டுவேன்'' என்றான். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போல் ஆயிற்று. ஒரு கணத்தில் புத்தாடை புனைந்தான். மணமேடையில் ரங்கநாதனும் முத்தாவலியும் அமர்ந்தார்கள். கெட்டி மேளம் முழங்கியது. முத்தாவலியின் கழுத்தில் நாதன் மாங்கல்யம் பூட்டினான். அப்போது தன் கழுத்தில் முருகனே வந்து தாலி கட்டுவதாக எண்ணி முத்தாவலி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள். அவள் அடைந்த ஆனந்தத்துக்கு எல்லையில்லை. அம்புஜம் பரவசம் அடைந்தாள். திருமணப்பந்தலில் பெரிய பரபரப்பு ஏற்பட்டது. எல்லோரும் மணமக்களை வாழ்த்தினார்கள். இந்த அதிசயத்தைக் கண்ட சங்கரையர் முகங்கவிழ்ந்தார். பிரின்ஸ்பால் பேய்போல் நின்றான்.

சேதுராமையர் சங்கரையரைப் பார்த்து கைகூப்பிக் கும்பிட்டார். ''நீங்கள் எல்லோரும் சாப்பிட்டுவிட்டுத்தான் போக வேணும்'' என்றார்.

சங்கரையர் தன் உறவினருடன் திருட்டுப்பூனை போல் நீட்டினார் கம்பி.

ரங்கநாதன், ''மாமா! நான் அமெரிக்காவில் படிப்பை முடித்து விட்டு வந்தேன். நல்ல காலத்துக்கு இங்கு வந்து சேர்ந்தேன். இந்தப் பெட்டியில் ஒரு லட்ச ரூபாய் இருக்கின்றது. உள்ளே வையுங்கள்'' என்றான்.

நாதனே தனக்கு நாதனாக வந்தது பற்றி உடம்பும் உள்ளமும் பூரித்தாள் முத்தாவலி.

# மகாபாரதம்

---

## சாந்தி பருவம்

## மோக்ஷ தருமம்

(216-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### கிருஷ்ணருடைய பெருமை

பீஷ்மர் "தருமநந்தன! கிருஷ்ணர் ஆதியும் அந்தமும் இல்லாதவர். பாவங்களை அழிப்பதனால் அரி; எங்கும் வியாபகமாக இருப்பதனால் விஷ்ணு; நாரம் என்ற அன்புக்கும் தண்ணீருக்கும் இவரே வாசஸ்தானம் ஆனபடியால் நாராயணர்; எல்லாவுயிர்களுக்கும் வாசஸ்தானம் ஆனபடியால் வாசுதேவர்; தாம-இந்திரிய நிக்கிரகம்: உத்—உயர்வு: ரு—அடைவது. இந்திரிய நிக்கிரகத்தில் அவரை அடுத்து உயர்வை யடைவதனால் தாமோதரன்; சூரியன் சந்திரன் அக்கினி என்ற சுடர்களைப் போன்ற ஒளியுடைய கேசங்கள் இருப்பதனால் கேசவன்; நிலத்துக்கு நலஞ் செய்வதனால் க்ருஷ்ணர்; குண்டம்—மடங்குதல்; வி—இல்லை. மடங்கி ஒடுங்குந்தன்மையில்லாதவர் : அதனால் வைகுண்டன்: இவர் முன்னொரு சமயம் வியாசரை தன் அருளால் சத்யவதியிடம் தோற்றுவித்தார். அது வியாசருக்கு முற்பிறப்பு ஆகும். அப்போது அவருடைய பேர் அபாந்தரதமர் என்பதாகும். இவர் உலகத்தைக் காக்கும் பொருட்டு அவதரிக்கின்றார். சித்தர்களும் முத்தர்களும் பத்தர்களும் இவரை ஆராதிக்கின்றார்கள். இவர் தேவதேவர். இவரை வழிபட்டார் சித்தியும் முத்தியும் பெறுவார்கள். இகபர நலன்களை எளிதில் தரும் பெருமையும் அருமையும் உடையவர். ஒருமைப்பட்ட உள்ளத்தால் இவரை வழிபட்டோர் எல்லாப் பாவங்களிலிருந்து விடுபட்டுப் பரகதி பெறுவர். இவர் வேதங்களை விளக்கம் புரிந்தவர்: காத்தற் கடவுள் கருணைக்கடல்; பூபாரந்தீர்க்க வந்தவர். மாபாதகங்களைப் போக்கி அடியவர்க்கு அருளும் அருட்கடல்; சிறந்த யோகிகளால் அறியத்தக்கவர்: மாயாதீதர்; இவரை அடைந்து நலமெலாம் பெறுக" என்றார்.

சாந்தி பருவம் முற்றிற்று.

---

*க்ருஷ்—கீறுவது. இது ஆகுபெயராக நிலம். ந—நலம். நிலத்துக்கு நலம் புரிகின்றவர்.

# அநுஸாசன பருவம்

யுதிஷ்டிரர், சரதல்பத்தில் படுத்திருக்கும் மகாத்மாவும், தோல்வியடையாதவரும், எல்லாம் அறிந்தவருமாகிய பீஷ்மரிடம் அணுகி வணங்கிக் கூறுகின்ருர்.

"பிதாமகரே! தாங்கள் அரச தருமம், ஆபத் தருமம், மோட்ச தருமம் என்ற மூன்று தருமங்களையுங் கூறினீர். என் மனதில் ஆறுதல் உண்டாகவில்லை. ஆறுதல் அடையுமாறு பல காரணங்களை நீர் கூறியும் என் மனதில் சாந்தி யேற்படவில்லை. தானே செய்த குற்றத்துக்கு ஆறுதல் ஏது? உடம்பெல்லாம் உதிரம் ஒழுகப் புண்ணுகி இந்த அம்புப் படுக்கையில் புண்ணிய மூர்த்தியாகிய தாங்கள் படுத்திருப்பதற்குக் காரணம் நான்தானே. அரசர்களும் உறவினர்களும் என்னுல் மரணம் அடைந்தார்கள். தங்களை இந்த நிலையில் காணுமல் மறைந்துவிட்ட துரியோதனனே பாக்கியசாலி! நானும் மரணமடைந்திருந்தால் நன்ருக இருந்திருக்கும். உம்மை இந்நிலையில் பார்க்கும் துயரம் எனக்கு நேர்ந்திராது. இனி எனக்கு என்ன வாழ்வு வேண்டியுளது? எனக்கு சிறிதுகூட மகிழ்ச்சியில்லை. பாவத்திலிருந்து விடுபடும் வகையை எனக்கு நீர் உபதேசிக்க வேண்டும்'' என்ருர்.

பீஷ்மர் கூறுவாராயினர்: "அரசனே! நீ துயரப்படாதே. இந்த அரச வம்சம் அழிந்ததற்குக் காரணம் நீயன்று; வினைப்பயன்தான் காரணம். இதுபற்றி முன் நடந்த ஒரு சரிதையைக் கூறுகின்றேன் கேள்.

### வினையே காரணம்

கௌதமி என்ற ஒரு கிழவி யிருந்தாள். அவள் காமக்ரோதம் இல்லாதவள். இவளுடைய மகன் பாம்பு கடித்து மாண்டு போனுன். அது கண்ட கிழவி மனம் பதருமல் ஆறுதலாகவே இருந்தாள்.

அர்ஜுனகன் என்ற வேடன் சீற்றமடைந்து ஒரு கயிற்ருல் சுருக்கிட்டு அந்த நாகத்தை யிழுத்து வந்து, "அம்மா! இந்தப் பாம்புதான் உன் அருமந்த மகனைக் கொன்றது. இக்கொடிய பாம்பை தீயிலிட்டுக் கொல்லட்டுமா? துண்டு துண்டாக நறுக்கட்டுமா? சீக்கிரம் சொல்'' என்ருன்.

கௌதமி, "அர்ஜுனகா! நீ அறிவில்லாதவன். இந்தப் பாம்பைக் கொல்லாதே; விட்டுவிடு. எல்லாம் அவரவர் செய்த வினைப் பயனுலேயே நடைபெறுகின்றது. விதியை நோவாமல் வேறு யாரையும் நோவக் கூடாது. மதியுள்ளவர்கள் எல்லாம் விதியின் பயன் என்று உணர்ந்து உலக மாயையில் அழுந்தாமல் நீரில் மிதக்கும்

ஓடம் போல் மிதந்து கொண்டிருப்பார்கள். அப்பா! இந்தப் பாம்பைக் கொன்ருல் மாண்ட மகன் மீண்டு எழுவானு? இது உனக்கு ஒரு தீங்குஞ் செய்யவில்லேயே? இதைக் கொன்றுவிட்டால் உலகிலே யாருமே இறக்கமாட்டார்களா?'' என்ருள்.

வேடன், ''மூதாட்டியே! ஆன்ருேர்கள் பிறருடைய குற்றங்களே யுங் குணங்களேயுங் கருதமாட்டார்கள். இந்தப் பாம்பு மேலும் வாழுமானுல் பலரையுங் கடிக்கும். தீயவரை அழித்துத் தூயவரை வாழவைக்க வேண்டும். புல்லேக் களேந்தால்தான் நெல் வளரும். இதனேக் கொல்வதனுல் எனக்குப் புண்ணியம் வரும். ஆதலால் இதைக் கொல்லுவேன்'' என்ருன்.

கௌதமி, ''நல்லவனே! பொறுமை பெருமை தரும். பகைவனிடத்திலும் கருணே காட்டவேண்டும். இதனேக் கொல்வது கூடாது'' என்ருள்.

வேடன், ''அம்மா! தீயவர்களிடம் கருணே காட்டக்கூடாது; இந்திரன் விருத்திரனேக்கொன்ருன். சிவபெருமான் யக்ஞபுருஷனேக் கொன்ருர். இதனே விட்டால் பலரையுங் கடித்துக் கொல்லும்'' என்ருன்.

அப்போது பாம்பு சிறிது தைரியத்தை யடைந்து மெல்லிய குரலில் கூறலாயிற்று. ''அர்ஜுனகா! நான் பராதீனமானவன். யமனுடைய கட்டளேயால் இவனேக் கடித்தேன். உணவுக்காகவோ பகை காரணமாகவோ கடிக்கவில்லே. இதற்குக் காரணம் யமன் தான்'' என்றது

வேடன்: ''சர்ப்பமே! ஒரு மண்பானே செய்வதற்குத் தடி சக்கரம் முதலியவை காரணமாவது போல் இந்தக் கொலேக்கு நீயுந்தான் காரணம். ஆகவே உன்னே நான் கொல்லுவேன்.''

பாம்பு: ''வேடனே! இயமன்தான் காரணன். நான் கருவி. கருவியை நோவக்கூடாது; கல்லே நோவதா? எறிந்தவனே நோவதா? சிந்தித்துப் பார்; இது உனக்கு விளங்கும்.''

அங்கே யமன் தோன்றினுன். ''ஏ பாம்பே! நான் காலத்தினுல் ஏவப்பட்டு உன்னே யேவினேன். காற்று மேகங்களே இழுப்பதுபோல் காலம் என்ற ஒன்றுக்கு உட்பட்டவன் நான். சராசரங்கள் யாவும் காலத்தால் நடத்தப்படுகின்றன. சூரியன், சந்திரன், விஷ்ணு, கனல், புனல், காற்று, இந்திரன், மண், விண், மித்திரன், வசுக்கள், நதிகள், கடல்கள் முதலியவை யாவும் காலத்தினுல் தோன்றுகின்றன; ஒடுங்குகின்றன; ஆதலால் என்மீது குற்றமில்லே. இந்த மரணத்துக்குக் காரணம் காலந்தான்'' என்ருன்.

அப்போது காலதேவதை அங்கே தோன்றியது. "இக்குழந்தை இறந்ததற்குக் காரணம் பாம்பும் யமனும் நானும் அல்ல. இவன் செய்த கன்மந்தான் காரணம். இவன் செய்த கன்மத்தால் மாண் டான். நாங்கள் அனைவரும் கன்மத்துக்கு உட்பட்டவர்கள். கன்மங் கள் ஏவுகின்றன. அதுபடி நாங்கள் தொழிற் படுகின்றோம். ஆகவே கன்மத்தைச் செய்த பாலகனே இதற்கு மூல காரணம்" என்று கூறியது.

கௌதமி, "இந்த மரணத்துக்குக் காரணம் பாம்பும் யமனும் காலமும் அல்லர். தான் செய்த வினைப்பயனால் இவன் மாண்டான். பிள்ளையை யிழக்க நானும் வினை செய்துளேன்" என்றாள். பின்னர் வேடனும் பாம்பும் யமனும் காலதேவதையும் வந்தவாறே சென் றனர். ஆகவே தரும நந்தனா! அவரவர்கள் தாம் செய்த வினைப் பயனால் மாள்கின்றார்கள். இந்த யுத்தத்துக்கு நீ காரணம் அல்லன். துரியோதனாதியர் வினைப்பயனால் மாண்டார்கள். நீ ஆறுதல் அடைக" என்றார். இதைக் கேட்ட தருமர் ஆறுதலடைந்தார்.

## இல்லறத்தின் சிறப்பு

யுதிஷ்டிரர், "பேரறிவாளரே! மரணத்தை வென்ற இல்லறத் தோன் யாவன்? இந்த இல்லறத்தின் பெருமையைக் கூறும்" என்று வினவினார்.

பீஷ்மர், "அரசனே! இல்லறத்தில் நின்று மரணத்தை வென் றவன் சுதர்சனன். அவன் சரிதையைக் கூறுகின்றேன் கேள்:

மனுவின் மகன் இக்ஷ்வாகு; அந்த இக்ஷ்வாகுவுக்கு நூறு புதல் வர்கள் பிறந்தார்கள். இவர்களில் பத்தாவது மகனாகிய தசாசுவன் மாகிஷ்மதி என்ற நகரில் அறநெறி நின்று அரசு புரிந்தான். இவன் மகன் மதிராச்வன். இவனுடைய மகன் தியுதிமான்; இவனுடைய மகன் சுவீரன்; இவனுடைய மகன் துர்ஜயன் .இவனுடைய புதல்வன் துரியோதனன்.

துரியோதனனுடைய ஆட்சி மாட்சியுடன் விளங்கியது. காலத் தில் மழை பொழிந்தது. தன தான்யங்கள் மலிந்திருந்தன. துரியோ தனன் வேத வேதாந்தங்களின் கரை கண்டவன்; தற்புகழ்ச்சியில்லா தவன். எல்லோரிடமும் அன்பாக இருந்தான். தரும குணசீலன். பாவங்களைப் போக்கவல்ல நருமதையென்ற நதிதேவதை இவனிடம் காதல் கொண்டாள். துரியோதனனுக்கும் நருமதைக்கும் சுதர்சனை என்ற அழகிய ஒரு பெண் பிறந்தாள். இத்தகைய அழகுடைய ஒருத்தி எங்குமில்லை. அழகின் சிகரமாகிய அவள் யாகசாலையில் பிதாவுக்குப்

பணிவிடை செய்து கொண்டிருந்தாள். அவளுடைய அழகைக் கண்ட அக்கினி பகவான் மோகங்கொண்டான். தழற்கடவுள் அவன் முன் தோன்றி, ''அழகின் கருவூலமே! உன்னை நான் விரும்புகின்றேன்'' என்றான். அவள் நாணி ''ஐயனே! நான் சுதந்தரம் இல்லாதவள்; என் தந்தையைக் கேள்'' என்றாள்.

அக்கினிதேவன் ஓரந்தண வேடத்துடன் அரசனை யணுகி ''உன் புதல்வியை எனக்குக் கொடு'' என்று கேட்டான். மன்னவன் ''இவன் ஏழை அந்தணன்'' என்று எண்ணி மறுத்துவிட்டான்.

அரசன் யாகசாலையில் நுழைந்தான். அங்கே அக்கினி மறைந்துவிட்டது. அது கண்ட அரசன் கலங்கினான். மந்திரங்களிலும் மறைகளிலும் வல்ல அந்தணர்களைப் பார்த்து ''அக்கினி மறைவதற்குக் காரணம் யாது?'' என்று கேட்டான். அந்தணர்கள் அக்கினியின் நாம மந்திரங்களைக் கூறி அக்கினியை அழைத்தார்கள். அக்கினி அவர்கள் முன்தோன்றி, துரியோதனனுடைய புதல்வி சுதர்சனையை யாசித்தான். இதனை அந்தணர்கள் அரசனிடம் அறிவித்தார்கள். துரியோதனன் ''அக்கினி பகவானே! உனக்கு வணக்கம். நீர் எப்போதும் இவ்விடத்திலேயே இருப்பதாக ஒப்புக்கொண்டால் என் கன்னியை உனக்குப் பன்னியாகத் தருவேன்'' என்றான். அக்கினி பகவான் அதற்கு இணங்கினார். அதனால் மாகிஷ்மதி நகரத்தில் இப்பொழுதும் அக்கினி பகவானுடைய சாந்நித்தியம் இருக்கின்றது. சகாதேவன் திக்கு விஜயம் செய்தபோது கண்டானல்லவா?

அலங்கரித்துக் கொண்ட சுதர்சனையை கனற்கடவுளுக்கு விதிப்படி கொடுத்தான். இணையில்லாத அவளைப் பெற்று அழற் கடவுள் அளவற்ற மகிழ்ச்சி யடைந்தான். அவளிடம் சுதர்சனன் என்ற சிறந்த மைந்தன் பிறந்தான். நிறைமதிபோல் விளங்கிய அவன் இளமையிலேயே வேதங்கள் அனைத்தையும் ஓதியுணர்ந்தான்.

அக்காலத்தில் நிருகன் என்ற அரசனுடைய பிதாமகனாகிய ஓகவான் என்ற மன்னனுக்கு ஓகவதி என்ற பெண்ணும், ஓகரதன் என்ற பிள்ளையும் இருந்தார்கள். ஓகவானுடைய புதல்வி ஓகவதியை சுதர்சனன் மணந்து கொண்டான்.

சுதர்சனன் ஓகவதியுடன் குருக்ஷேத்திரத்தில் தங்கி நல்லறமாகிய இல்லறத்தில் இனிது வாழ்ந்தான். ''நான் இல்லறத்திலிருந்தே இயமனை வெல்லுவேன்'' என்று சபதம் செய்து கொண்டான். அக்கினியின் புத்திரனான சுதர்சனன், தன் மனைவி ஓகவதியைப் பார்த்துக் கூறுவான்.

''என் அன்புள்ளவளே! இல்லறத்தவனுக்கு விருந்தோம்பல் தான் இன்றியமையாதது. விருந்தினனை எந்த வகையாலும் விரோ

திக்கக் கூடாது. நமது இல்லத்துக்கு வந்த விருந்தினன் என்ன என்ன வகையில் திருப்தி யடைவானே அவற்றைத் தன்னையே தரு வதாயினும் நீ தயங்கக் கூடாது. இல்லறத்தானுக்கு விருந்தோம்பலை விட மேலான அறம் யாதொன்றுமில்லை. என் சொல்லை நீ மாறுமல் நடப்பாயாக. நான் வீட்டிலிருந்தாலும் வெளியிற் சென்றிருந் தாலும் நீ வந்த அதிதிகளைத் திருப்தி செய்து வைக்கவேணும்'' என்ருன்.

ஓகவதி கணவனை, வணங்கி ''தங்கள் திருவுள்ளம் போல் எப் போதும் நான் நடப்பேன்'' என்ருள். சுதர்சனனை வெல்லக்கருதி எப் போதும் யமன் அவனைப் பின் தொடர்ந்து கொண்டிருந்தான்.

ஒருநாள் சுதர்சனன் சமித்துக்கள் கொணரும் பொருட்டு வெளியே சென்றிருந்தான். அந்தணன் ஒருவன் ஓகவதியிடம் வந்தான். ''பெண்ணரசியே! நான் உன் வீட்டுக்கு வந்த விருந்தினன். நீ இல்லறத்துக்குரிய தருமத்தில் நம்பிக்கை யிருக்குமாயின் எனக்கு நீ விருந்து செய்வாயாக'' என்ருன்.

ஓகவதி அவனை வேத விதிப்படி வரவேற்ருள். காலலம்ப நீர் தந்து ஆசனமுந்தந்து உபசரித்தாள். ''உனக்கு நான் என்ன தர வேண்டும்?'' என்று கேட்டாள். அந்தணன் ''மாதரசே! எனக்கு நீ தான் வேண்டும். உன்னை எனக்குத் தந்து என் விருப்பத்தை நிறை வேற்றுவாயாக'' என்ருன்.

ஓகவதி வேண்டத்தக்க வேறு பொருள்களைத் தருவதாகக் கூறியும், அவன் பிறபொருள்களை விரும்பாமல், அவளை விரும்பினன். ஓகவதி நாணமுற்ருள். தன் கணவனுடைய கட்டளையை நினைத்து தன்னைத் தருவதாகக் கூறி அவன் அருகில் அமர்ந்தாள்.

அப்போது சமித்துக்களுடன் சுதர்சனன் வீட்டிற்கு வந்தான். வழக்கம்போல் வரவேற்கின்ற மனைவியைக் காணுது திகைத்தான். ''ஓகவதி! நீ எங்கு சென்ருய்?'' என்று பலமுறை கூவினன். கற்புக் கரசியான அவள் பேசாமல் இருந்தாள்.

அந்த அந்தணன் வீட்டுக்குள் இருந்தவண்ணம் ''அக்கினி புத்திரனே! நான் அதிதி. நான் உன் மனைவியை விரும்பி வந்தேன்; இவள் தன்னையே தரும் முறையினல் என்னுடன் இருக்கின்ருள்'' என்ருன்.

சுதர்சனன் சொல் தவறுவானுயின் அவனை அடிக்க வேண்டும். என்று கண்ணுக்குத் தெரியாமல் இரும்புத் தடியுடன் யமன் அருகில் நின்று கொண்டிருந்தான். சுதர்சனன் பெருமகிழ்ச்சி யுற்ருன். என்

உயிரும் மனைவியும் மற்றுமுள்ள பொருள்கள் யாவும் விருந்தினனுக்குத் தரத்தக்கவை என்பது என் விரதம். ஆகவே என் மனைவியுடன் நீ இருப்பது எனக்கு மகிழ்ச்சியே, இது உண்மை'' என்றான், அப்போது ''சுதர்சனன் பேசுவது உண்மை'' என்று எல்லாத் திசைகளிலிருந்தும் ஒரு ஒலியுண்டாயிற்று.

அந்தணன் வெளியே வந்தான். அவனுடைய உருவம் விண்ணளவும் உயர்ந்திருந்தது. ''குற்றமற்றவனே! உனக்கு நன்மையுண்டாகக் கடவது. நான் தரும தேவதை; நீ உத்தமமானவன். சமயம் பார்த்து உன்னை அடிக்கும் பொருட்டு உன்னுடன் தொடர்ந்து கொண்டிருந்த இந்த யமனை நீ வென்றுவிட்டாய். உன் மனைவி மகா பதிவிரதை. மாசு மறுவில்லாதவள். இந்த கற்புக்கரசியைக் கண்ணெடுத்துக் காண வல்லவன் இந்த மூவுலகிலும் இல்லை. இவள் சொன்ன சொல் மாறாது. ஒழுக்கமே வடிவாய இந்த உத்தமியின் பாதி யுடம்பு, உலகில் உள்ள பாவங்களைப் போக்கும் பொருட்டு ஓகவதி என்ற பேருள்ள நதியாக விளங்கும். மற்றொரு பாதி உடம்பால் இவள் உன்னுடன் வாழ்வாள். சென்றால் திரும்பாத முத்தியுலகிற்கு நீ இவளுடன் சேருவாய். நீ இல்லற நெறியால் உலகங்களையெல்லாம் வென்றுவிட்டாய். நீ இந்த உடம்புடனேயே பரகதியடைவாய், உன் ஆற்றல் அளவிடற்கரியது'' என்றாள்.

ஆயிரம் வெண்புரவி பூட்டிய ஒளியுடைய தேரில் இந்திரன் அங்கு வந்தான். அவனை வணங்கினான். சுதர்சனன் மனத்தையும் உலகங்களையும் வென்றான். பரகதி சென்றான்.

''யுதிஷ்டிரனே! இல்லறத்தானிடம் வந்த அதிதி ஆசீர்வதிப்பதற்கு நிகரான புண்ணியம் நூறு வேள்விகள் செய்தாலும் உண்டாகாது. வீட்டுக்கு வந்த விருந்தினனை உபசரிக்க வில்லையாயின் வந்த விருந்தினன் தன் பாவத்தைக் கொடுத்துவிட்டு இல்லறத்தானுடைய புண்ணியத்தை யெடுத்துக் கொண்டு போகின்றான்: ஆகவே இல்லறத்தான் யமனையும் வெல்லுவான். இந்த வரலாற்றைக் கேட்டவர்கள் ஆயுளையும் புகழையும் நன்மையையும் பெறுவார்கள்'' என்று கூறினார்.

(தொடரும்)

# அதிசயம்

"எதிரொலி விசுவநாதன்"

பாரத காவியத்தில் ஒரு நிகழ்ச்சி. அறக் கடவுளானவர் தருமரை விளித்து, இந்நிலவுலகின் கண்பேரதிசயம் யாதென்று வினவுகிறார்.

நாள்தோறும் எண்ணற்ற உயிர்கள் இறந்தொழிவதைக் கண் கூடாகக் கண்டும் மனிதர்கள் தங்களை நிலைத்த உயிரினராக எண்ணி எண்ணி இறந்தொழிவதே பேரதிசயம் என்று தருமர் விடைகூறுகிறார்.

'ஊரெல்லாம் கூட்டி ஒலிக்க அழுதிட்டு
பேரை மாற்றிப் பிணமென்று பேரிட்டு
சூரையங் காட்டிடை கொண்டுபோய் சுட்டிட்டு
நீரிடை மூழ்கி நினைப்பொழிந்தனரே'

என்ற திருமூலரின் பாட்டு இதற்கு விளக்கவுரையாக இருக்கிறது. இதனையே 'நீரிற் படிந்துவிடு பாசம்' என்று அருணகிரியார் சொல்கிறார்.

தருமர் சொன்ன அதிசயத்தைக் காட்டிலும் ஒரு பெரிய அதிசயத்தை சிவப்பிரகாச அடிகள் தாம் எழுதிய நன்னெறி நூலில் குறிப்பிட்டுள்ளார். அதனை விரிவாக விளக்குவதே இக் கட்டுரையாகும்.

'வாய்த்தது ஈதோர் பிறவி மதித்திடுமின்' என்று திருநாவுக்கரசரும் 'அரிது அரிது மானிடராதல் அரிது' என்று அவ்வையாரும் மானிடப் பிறப்பின் அருமை பெருமையை தெளிவுபடுத்துகின்றனர். இப்பெறற் கரிய மானிடப் பிறப்பின் பெருமை யோராது பலர் உண்டும் உறங்கியும் அவமே மாய்ந்தொழிகின்றனர்.

நல்லாய் இல் செய்தார்—நடந்தார்—உடுத்தார்—நரைத்தார்—இறந்தார் என்று வெறுஞ் சொல்லாய் பலருடைய வாழ்வு போய்விடுகிறது.

நடித்தும் மண்ணிடை பொய்யினைப் பல செய்தும் நான் எனது எனும் ஆணவத்தில் சிக்கியும் பலர் தங்களுடைய வாழ்நாளைக் கழித்துவிடுகின்றனர். இவர்களுடைய ஆசைக்கோ அளவில்லை.

தொடரும்

## எமது புதிய வெளியீடு

திருப்புகழ் விரிவுரை ஏழாவது தொகுதி பஞ்சபூத ஸ்தலங்களில் காஞ்சிபுரம் பாடல்கள் 44-ம், திருவானைக்காப் பாடல்கள் 14-ம் ஆகமொத்தம் 58 திருப்புகழ்ப் பாடல்களுக்கு விரிவான உரை அடங்கியது. டெமி 1/8 அளவில் 300 பக்கங்கள்.

விலை ரூ. 4-00. தபாற் செலவு 1-40.

## அமுத நிலையம் வெளியீடு

**திருமுருகாற்றுப்படை விளக்கம்.** திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் எழுதிய விரிவான விளக்க உரையுடன். அருஞ்சொற் பொருள் அகராதியுடன் கூடியது. கிரௌன் 1/8 அளவில் 444 பக்கங்கள்.

**விலை ரூ. 8–00. தபாற் செலவு ரூ. 1-40**

வெளியார் பதிப்பு :

## வாழும் வழி

ஆசிரியர் : திருமுருக கிருபானந்தவாரி அவர்கள். வாழும் வழி, கடவுளை நம்புவது அறிவுடைமை, கடவுள், வழிபாடு, அறம், ஞானம், இல்லறம், ஜீவகாருண்யம், ஒழுக்கம், அரசியல் இந்துமதம், பொது—எனப் பன்னிரண்டு தலைப்புக்களில் எழுதிய சிறு சிறு கட்டுரைகளைக் கொண்டது கண்கவர் பதிப்பு. கிரௌன் அளவில் 128 பக்கங்கள் கொண்டது. விலை ரூ. 1-50 (தபாற் செலவு பதிவுத் தபாலில் ரூ. 1-15)

மேற்படி புத்தகங்கள் யாவும் நமது காரியாலயத்தில் கிடைக்கும்.

---